உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# வடமொழி சுலோகங்களில் சிவமஹிமையும் அடியார் மஹிமையும்

**தொகுப்பும் தமிழ் விளக்கமும்:**
தர்மப்ரவசனரத்னம், உத்தம உபன்யாஸக சக்கரவர்த்தி
**பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி ராஜகோபால சாஸ்திரிகள்**

**शैवं विना नान्यदिहास्ति दैवतं**
**तलोपमेषु अन्यमतेष्विदं महत् ।**
**शैवं मतं चोत्तममित्युपास्यतां**
**मन्त्रेषु पञ्चाक्षरमन्त्र उत्तमः ॥ १ ॥**

**ஶைவம் வினா நான்யதி³ஹாஸ்தி தை³வதம்**
**தலோபமேஷு அன்யமதேஷ்வித³ம் மஹத் ।**
**ஶைவம் மதம் சோத்தமமித்யுபாஸ்யதாம்**
**மந்த்ரேஷு பஞ்சாக்ஷரமந்த்ர உத்தம: ॥ 1 ॥**

1. சிவத்தைத் தவிர இந்த உலகில் வேறு தெய்வம் இல்லை. சிவமதத்தை வேறு மதங்கள் நோக்கும்போது அவை தங்களை இலவம் பஞ்சுக்கு ஒப்பான நிலையை அடைந்ததாக எண்ணி சிவமதத்தில் ஒடுங்கும். எனவே சிவமதம் தான் உத்தமம். மந்திரங்களில் பஞ்சாக்ஷரம் தான் உத்தமம். மற்ற எந்த மதமும் இலவம் பஞ்சுக்குச் சமானமாகும். (சிவமதமோ மேருமலை போன்றதாகும்).

**उपास्य एकोधिपतिः पशूनां**
**तदीय भक्ताश्च समर्चनीयः ।**
**प्रीतः शिवः भक्त सपर्ययास्यात्**
**शिवप्रसादेन शुचं तरन्ति ॥ २ ॥**

**உபாஸ்ய ஏகோதி⁴பதி: பஶூனாம்**
**ததீ³ய ப⁴க்தாஶ்ச ஸமர்சனீய: ।**
**ப்ரீத: ஶிவ: ப⁴க்த ஸபர்யயாஸ்யாத்**
**ஶிவப்ரஸாதே³ன ஶுசம் தரந்தி ॥ 2 ॥**

2. இந்த உலகில் உபாஸிக்க வேண்டிய தெய்வம் ஒன்றே தான். அவர்தான் ஜகத்ரக்ஷகர். அவரிடம் பக்தி செய்யும் உத்தமர்களின் உள்ளத்தில் அவர் இருப்பதால் சிவபக்தர்களை நாம் பூஜித்தால் சிவ பக்தர்களையும் சிவ பெருமானையும் பூஜித்த

பலன் கிடைக்கும். சிவ பக்தர்களின் மனம் ஸந்தோஷப்பட்டால் சிவபெருமான் பரமப்ரீதி அடைவார். அதனுல் சிவப்ரஸாதம் கிடைக்கும். சிவ ப்ரஸாதத்தால் ஸகலமான துன்பங்கள், துக்கம், தரித்திரம் யாவும் விலகும்.க்ஷேமம் அடையலாம்.

**येन केनापि नियमात् पूजयन्ति महेश्वरम् ।**
**ते धन्याः शंकरः तेषां अचिरेण प्रसीदति ॥ ३ ॥**

**யேன கேனுபி நியமாத் பூஜயந்தி மஹேஸ்வரம் ।**
**தே த4ன்யாஃ ஶங்கரஃ தேஷாம் அசிரேண ப்ரஸீத3தி ॥ 3 ॥**

3. ஏதேனும் ஒரு நியமப்படி (அதாவது சிவதர்சனம், சிவபூஜை செய்த பிறகே ஜலம் அருந்துவது, சிவபூஜையில் வில்வம் வைத்துப் பூஜித்த பிறகு தான் சாப்பிடு வது இவை போன்ற ஏதேனும் நியமங்கள்) சிவபூஜை செய்பவர்களே சங்கரர் விரை வில் தன்யர்களாவார்கள். அவர்களிடம் சங்கரர் மகிழ்ச்சியடைந்து அருள் பாலிக்கி ருர். (அவர்கள் சீக்கிரம் சிவப்ரஸாதம் பெற்று க்ஷேமம் அடைவார்கள்)

**दुर्लभा शांकरी भक्तिः शिवभक्ताश्च दुर्लभाः ।**
**दुर्लभं भुवि जन्तूनां तन्मनोरथ पूरणम् ॥ ४ ॥**

**து3ர்லபா4 ஶாங்கரீ ப4க்திஃ ஶிவப4க்தாஶ்ச து3ர்லபா4ஃ ।**
**து3ர்லப4ம் பு4வி ஜந்தூனும் தன்மனேரத2 பூரணம் ॥ 4 ॥**

4. இந்த உலகில் மனிதனுகப் பிறப்பதே துர்லபம். அதிலும் அறிவு படைத்து அவ்வறிவினுல் சங்கர பக்தி வருவது துர்லபம். இவ்வுலகில் சிவ பக்தர்களைக் காண பேரவாக் கொள்ள வேணும். ஏன்? சிவபக்தர்கள் கிடைக்கமாட்டார்கள். அவர்களின் தரிசனம் சிவ தரிசனம் போனறதே. நமக்கு அந்த பக்தி வருவதும் அரிதே. அவர்கள் மனதை அறிந்து பூஜித்தால் க்ஷேமம் அடைந்தே தீருவோம்.

**शिरसा शिवभक्तानां पादांबुजरजःकणान् ।**
**वन्दामहे वयं नित्यं वासना ध्वान्त भास्करान् ॥**

**ஶிரஸா ஶிவப4க்தானும் பாதா3ம்பு3ஜரஜஃகணுன் ।**
**வந்தா3மஹே வயம் நித்யம் வாஸனு த்4வாந்த பா4ஸ்கரான் ॥**

5. சிரஸ்ஸினுல் சிவ பக்தர்களின் பாத தூளியை தினம் வணங்கி வருபவர் களுக்கு கெட்டவாஸனையினுல் வரும் பாவங்களை இருளைச் சூரிய ஒளி விரட்டுவது போலப் போக்கி விடும். எனவே நாமும் தினமும் சிவ பக்தர்களின் பாத தூளியை வணங்குவோம்.

**भिन्तन्ति शैलान् उदधीन् पिबन्ति**
**व्यत्यासयन्ति क्षितिमन्तरिक्षम् ।**
**तृणीकृत ब्रह्मपुरन्दराणां**
**किं दुष्करं शंकरकिकराणाम् ॥ ६ ॥**

**பி$^{4}$ந்தந்தி ஶைலான் உத$^{3}$தீ$^{4}$ன் பிப$^{3}$ந்தி**
**வ்யத்யாஸயந்தி க்ஷிதிமந்தரிக்ஷம் ।**
**த்ருணீக்ருத ப்$^{3}$ரஹ்மபுரந்த$^{3}$ராணாம்**
**கிம் து$^{3}$ஷ்கரம் ஶங்கரகிகராணாம் ॥ 6 ॥**

**6.** சிவ பக்தர்கள் மலையைத் தூளாக்குவார்கள். சமுத்திர நீரைக் குடித்து விடு வார்கள். பூமியையும் ஆகாயத்தையும் மாற்றி அமைப்பார்கள். பிரம்ம விஷ்ணு இந்திர பதங்கள் சிவபக்தர்களுக்குத் துரும்புக்குச் சமானம். எனவே சிவ பக்தர்களால் முடியாதது என்ன இருக்கிறது?

**சிவம்**